නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

51 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

නාට්‍ය හා රංග කලාව I, II
நாடகமும் அரங்கியலும் I, II
Drama and Theatre I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

## நாடகமும் அரங்கியலும் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** நாடகம் ஒன்றின் பிரதான நோக்கம் யாது ?
(1) படித்துச் சுவைப்பது
(2) மேடையில் சம்பவங்களைச் செய்துகாட்டுவது
(3) பார்ப்போருக்கு அறிவு புகட்டுவது
(4) பார்ப்போரிடையே ரச உணர்வை ஏற்படுத்துவது

**2.** நாடகத்தின் இறுதி ஒத்திகை எவ்வாறு அழைக்கப்படும் ?
(1) தொழினுட்ப ஒத்திகை
(2) வாசிப்பு ஒத்திகை
(3) உடை ஒத்திகை
(4) செயல் ஒத்திகை

**3.** நாடகத்தைக் குறிப்பதற்கான சிங்கள மொழிச் சொல் யாது ?
(1) நர்த்தன (2) நட்டும் (3) நாட்டிய (4) அபிநயா

**4.** 'உடக்குப்பாஸ்' எனும் நாடகநிலைச் சடங்கு மன்னாரில் பெரும்பாலும் ஆடப்படும் பிரதேசம் எது ?
(1) வங்காலை
(2) முருங்கன்
(3) நானாட்டான்
(4) பேசாலை

**5.** பின்வருவனவற்றுள் ஆற்றுகைக் கலைவடிவம் எனக் கொள்ள **முடியாதது**
(1) இசை (2) நடனம் (3) ஓவியம் (4) வில்லுப்பாட்டு

**6.** 'ஆரொடு நோகேன்' நாடகம், ஒரு
(1) பாடசாலை நாடகம் ஆகும்.
(2) சிறுவர் நாடகம் ஆகும்.
(3) கவிதை நாடகம் ஆகும்.
(4) அரசியல் நாடகம் ஆகும்.

**7.** ஆரொடு நோகேன் நாடகத்தில் இடம்பெறும் பாத்திரங்களை மாத்திரம் கொண்ட தொகுதி யாது ?
(1) ரஞ்சித்குமார், சுபத்திரா, ராஜதுரை, செல்வராணி
(2) சுபத்திரா, ரஞ்சித்குமார், கனகலிங்கம், அங்கயற்கண்ணி
(3) ரஞ்சித்குமார், செல்வராணி, ராஜதுரை, வேல்முருகு
(4) ராஜிவ், சீதா, சங்கரி, அபிராமி

**8.** பின்வருவனவற்றுள் வாசிப்பு அரங்கின் பண்பு எனக் **கூறமுடியாதது**
(1) பாத்திரங்களாக அசைந்து வாசித்தல்
(2) பாத்திரப் பண்புகளை உணர்ந்து வாசித்தல்
(3) குரலில் ஏற்ற இறக்கத்துடன் வாசித்தல்
(4) சொல்லாடலுக்கு அழுத்தம் கொடுத்து வாசித்தல்

[பக். 2 ஐப் பார்க்க


Department of Examinations Sri Lanka

9. பாத்திரம் ஒன்றின் நடத்தைக் கோலத்தைக் காட்டுவது, பாத்திரத்தின்
(1) பௌதிகப் பண்புகளாகும். (2) உளவியற் பண்புகளாகும்.
(3) சமூகவியற் பண்புகளாகும். (4) சமயப் பண்புகளாகும்.

10. பின்வரும் கூற்றுகளில் சொல்லாடல்களின் பண்பு **அல்லாதது**
(1) நாடகத்திற்கு நாடகம் வேறுபடுதல்
(2) பாத்திரப் பண்புடன் இணைந்திருத்தல்
(3) எந்தவொரு நாடகத்திற்கும் அத்தியாவசியமானதாகக் காணப்படல்
(4) நாடகத்தை வளர்த்துச் செல்ல துணைபுரிதல்

11. நடிகரைத் தெரிவுசெய்யும்போது நெறியாளர் கையாளும் உத்திகளுள் 'சல்லடைத் தெரிவு' என்பதால் கருதப்படுவது
(1) நெறியாளர், தயாரிப்பாளர் முன்னிலையில் நடிகர்களைத் தனித்தனியாக அழைத்துத் தெரிவுசெய்தல்
(2) நெறியாளர் சுயமாக ஒருவரைத் தெரிவுசெய்தல்
(3) அனைத்து நடிகர்களினதும் முன்னிலையில் நடிகரைத் தெரிவுசெய்தல்
(4) ஒரு பாத்திரத்தின் ஊடாக இன்னொரு பாத்திரத்தைத் தெரிவுசெய்தல்

12. மரபுவழிக் கூத்துகளில் பயன்படுத்தப்படும் அரிதாரம் என்பது
(1) மேடையைக் குறிக்கும்.
(2) மேடைப் பொருளைக் குறிக்கும்.
(3) ஒப்பனைப் பொருளைக் குறிக்கும்.
(4) கதாயுதம், வாள் போன்ற கைப்பொருள்களைக் குறிக்கும்.

13. சிறுவர்களுக்கான அரங்கு பின்வருவனவற்றுள் எதனைக் கொண்டிருக்கும் ?
(1) பாடல்களை மாத்திரம்
(2) அவர்களுக்கு விளங்கும் வகையிலான ஆட்ட அசைவுகளை
(3) பாத்திரங்களாக மிருகங்கள், பறவைகளை மாத்திரம்
(4) பெரியவர்களின் நடிப்பை

14. ஒரு குழு இன்னொரு குழுவை மந்திர தந்திரங்களால் மயக்கும் ஆட்டத்தைக் கொண்டது
(1) வசந்தன் கூத்து (2) மகிடி
(3) வேடன் பறி (4) உடுக்கடி ஆட்டம்

15. 'மனமே கதாவ' என்பதனை 'மனமே' என்னும் நாடகமாக்கியவர்
(1) எதிரிவீர சரத்சந்திர (2) கென்றி ஜெயசேன (3) பந்துல குணவர்தன (4) பராக்கிரம நிரியெல்ல

16. அரங்கிற்கான இசையின் நோக்கங்களிலொன்று
(1) நடிகர்கள் பாடுவதற்கு உதவுவது
(2) நாடகப் பாடலுக்கு மெட்டைத் தருவது
(3) பாத்திரங்களின் குரலினை மெருகூட்டுவது
(4) நாடகத்திலுள்ள உணர்ச்சிக் கட்டங்களின் தாக்கத்தை மேம்படுத்துவது

17. நாட்டுக்கூத்து மரபில் வட்டம் போடுதல் என்பது எதனைக் குறிக்கும் ?
(1) தூரம் நடந்து செல்வதனை
(2) கோபத்திற்கானது என்பதனை
(3) ஒருவருக்கொருவர் சண்டை போடுவதனை
(4) பக்கப்பாட்டிற்கான நேரம் என்பதனை

18. காமன் கூத்தில் தளமாக அமையும் கதை
(1) தருமரும் அர்ச்சுனனும் கவுண்டரை அழித்தல்
(2) அர்ச்சுனன் பாசுபதத்தைப் பெறுதல்
(3) சிவன் தன் நெற்றிக்கண்ணால் மன்மதனை அழித்தல்
(4) இராமர் அகலிகையை உயிர் பெறச் செய்தல்

19. பரத முனிவர் கூறும் பிரதான ரசங்கள் எத்தனை ?
(1) ஏழு (2) எட்டு (3) ஒன்பது (4) பத்து

20. நடிகர் வேட முகத்தை அணிவதன் நோக்கம் **அல்லாதது**
(1) வகிபாகத்திற்கு அழுத்தம் கொடுத்தல் (2) தன்னை உருமாற்றுதல்
(3) பாத்திரத்தைச் சுட்டுதல் (4) தன்னை அழகானவராகக் காட்டுதல்

[பக். 3 ஐப் பார்க்க

21. யதார்த்த மோடி நாடகத்திற் காணப்படும் பிரதான இயல்பு யாது ?
(1) மேடைப் பின்னணி குறியீடாகக் காணப்படுதல்
(2) வேட உடைகள் மிகைப்படுத்திக் காட்டப்படுதல்
(3) ஒப்பனை இயல்பானதாகக் காணப்படுதல்
(4) சந்தம், தாளம் என்பவற்றுக்கு ஏற்றதாக சொல்லாடல்கள் காணப்படுதல்

22. இசை நாடகத்தின் தந்தை எனக் குறிப்பிடப்படுபவர்
(1) நடிகமணி வி.வி. வைரமுத்து
(2) தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்
(3) பம்மல் சம்பந்த முதலியார்
(4) ம. தைரியநாதன்

23. கோவலன் கூத்தில் **இடம்பெறாத** பாத்திரம்
(1) கண்ணகி (2) பாண்டிமாதேவி (3) யமன் (4) வஞ்சிப்பத்தன்

24. காத்தவராயன் கூத்திற்காக அமைக்கப்படும் மேடை,
(1) வட்ட வடிவமானதாக இருக்கும்.
(2) அரைவட்ட வடிவமானதாக இருக்கும்.
(3) முக்கோண வடிவமானதாக இருக்கும்.
(4) படச்சட்ட அரங்கை ஒத்ததாக இருக்கும்.

25. எழுத்துரு ஒன்றை உருவாக்கும் செயன்முறையின் சரியான ஒழுங்கு முறையைத் தெரிவுசெய்க.
(1) கதை, சூழமைவுகள், சம்பவங்களின் ஒருமைப்பாடு, தர்க்கரீதியான தொடர்பு
(2) கதை, சூழமைவுகள், தர்க்கரீதியான தொடர்பு, சம்பவங்களின் ஒருமைப்பாடு
(3) கதை, தர்க்கரீதியான தொடர்பு, சூழமைவுகள், சம்பவங்களின் ஒருமைப்பாடு
(4) கதை, சூழமைவுகள், தர்க்கரீதியான தொடர்பு, சம்பவங்களின் ஒருமைப்பாடு

26. பேராசிரியர் க. கணபதிப்பிள்ளையின் நாடகங்கள் பெரும்பாலும்,
(1) கவிதைப் பாணியில் அமைந்திருக்கும்.
(2) குறியீட்டுத் தன்மையில் அமைந்திருக்கும்.
(3) இயற்பண்பு சார்ந்து அமைந்திருக்கும்.
(4) கூத்து முறையில் அமைந்திருக்கும்.

27. நா. சுந்தரலிங்கம் அவர்களால் எழுதப்பட்ட அபசுரம் நாடகம்,
(1) யதார்த்த மோடி நாடகமாகும்.
(2) கற்பித மோடி நாடகமாகும்.
(3) அபத்த மோடி சாயல் கொண்ட நாடகமாகும்.
(4) கலப்பு மோடி நாடகமாகும்.

28. பின்வருவனவற்றுள் கூத்தினையும் பரதத்தினையும் இணைத்துச் செய்யப்பட்ட நாடகங்கள் யாவை ?
(1) சக்தி பிறக்குது, முழங்கு முரசு
(2) புதியதொரு வீடு, கோடை
(3) கந்தன் கருணை, ஏகலைவன்
(4) இராவணேசன், சங்காரம்

29. குழந்தை ம. சண்முகலிங்கம் அவர்களால் மொழிபெயர்ப்புச் **செய்யப்படாத** நாடகம்
(1) அன்ரிகனி (2) ஒரு பாவையின் வீடு (3) ஈடிப்பஸ் மன்னன் (4) லியர் மன்னன்

30. அவைக்காற்று கலைக்கழகம் தயாரித்த ‘சம்பந்தம்’ எனும் நாடகத்தின் மூல நாடகாசிரியர்
(1) கிரிஸ் கர்னாட் (2) பாதல் சர்க்கார் (3) அன்ரன் செக்கோவ் (4) ஹென்றிக் இப்சன்

31. ‘சொக்கரி’ நாடகத்தில் பயன்படுத்தப்படும் வேட முகங்கள் எதனால் செய்யப்பட்டவை ?
(1) மரத்தால்
(2) மண்ணால்
(3) கடதாசியால்
(4) ரெஜிபோமினால்

32. நாடக விமர்சனம் என்பது, நாடகத்தின்
(1) குறைகளைக் கூறுவது
(2) நிறைகளைக் கூறுவது
(3) குறைகளையும் நிறைகளையும் சமாந்தரமாகக் கூறுவது
(4) குறை, நிறைகளை ஆராய்ந்து ஆக்கபூர்வமாகக் கூறுவது

33. ஒரு நாடகத்திற்கான காட்சி அலங்காரம் என்பது,
(1) எப்போதும் பின்னாலேயே இருக்கும்.
(2) அளிக்கையின் பிரதான மோடியை நிலைநிறுத்தும்.
(3) எப்போதும் நடப்பியல்பை ஒத்ததாக இருக்கும்.
(4) பகட்டாகவும் ஆடம்பரமாகவும் இருக்கும்.

34. ‘ஆறொடு நோகேன்’ நாடகத்தில் வரும் பிரதான பாத்திரங்களின் வேட உடை,
(1) யதார்த்தம் சார்ந்ததாகக் காணப்படும்.
(2) குறியீட்டுத் தன்மையில் காணப்படும்.
(3) மோடிமைத் தன்மையில் காணப்படும்.
(4) பகட்டு, ஆடம்பரமானதாகக் காணப்படும்.

[பக். 4 ஐப் பார்க்க

**35.** இப்படத்திற் காட்டப்பட்டுள்ள உணர்வு வெளிப்பாடு யாது ?
(1) கோபம்
(2) கவலை
(3) பயம்
(4) சிரிப்பு



**36.** படத்தின் மூலம் காட்டப்படும் இந்திய நடன வடிவம் எது ?
(1) குச்சுப்புடி
(2) ஒடிசி
(3) கதகளி
(4) மணிப்புரி



**37.** படத்தில் காட்டப்பட்டுள்ள அரங்கவெளி குறிப்பது,
(1) வடமோடிக் கூத்தரங்கை ஆகும்
(2) வடபாங்கு கூத்தரங்கை ஆகும்.
(3) காமன் கூத்தரங்கை ஆகும்.
(4) மகிடிக் கூத்தரங்கை ஆகும்.



- கீழே A, B, C, D ஆகியவற்றால் குறிப்பிடப்பட்டுள்ளவர்களின் படங்களை ஆதாரமாகக் கொண்டு **38** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிக்குக.


A


B


C


D

**38.** மயில், தாளக்காவடி போன்ற நாடகங்களை எழுதி, நெறியாள்கை செய்தவரைக் குறிக்கும் எழுத்து யாது ?
(1) A (2) B (3) C (4) D

**39.** ஈழத்தில் சிறந்த நடிகராகவிருந்து, ஜனாதிபதி விருது பெற்றவரைக் குறிக்கும் எழுத்து யாது ?
(1) A (2) B (3) C (4) D

**40.** இலங்கையில் பா நாடகங்களை எழுதிப் புகழ் பெற்றவரைக் குறிக்கும் எழுத்து யாது ?
(1) A (2) B (3) C (4) D

* *

[பக். 5 ஐப் பார்க்க

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

51 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

නාට්‍ය හා රංග කලාව I, II
நாடகமும் அரங்கியலும் I, II
Drama and Theatre I, II

## நாடகமும் அரங்கியலும் II

**கவனிக்க :**

* **முதலாம்** வினாவுக்கும் ஏனையவற்றுள் எவையேனும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

**1.** சுருக்கமான விடை எழுதுக.

(i) அரங்கப் பயிற்சி என்பது யாது ? (01 புள்ளி)

(ii) **அர்ச்சுனன் தபசு** பெரும்பாலும் ஆடப்படும் பிரதேசம் எது ? (01 புள்ளி)

(iii) ஒளி விதானிப்பில் சிவப்பு வர்ணம் பயன்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள் **இரண்டு** தருக. (01 புள்ளி)

(iv) இந்திய அரங்கில் கட்டியக்காரன் எனப்படும் பாத்திரம் இடம்பெறும் நாடக வகை யாது ? (01 புள்ளி)

(v) பாரம்பரிய சிங்கள அரங்கில் வேடமுகம் பயன்படுத்தி ஆற்றுகை செய்யப்படும் **இரண்டு** நாட்டார் அரங்குகளைப் பெயரிடுக. (01 புள்ளி)

(vi) சர்வதேச நாடக தினம் எப்போது கொண்டாடப்படுகிறது ? (01 புள்ளி)

(vii) கூத்து மரபில் 'மாத்துப் பூசுதல்' என்றால் என்ன ? (01 புள்ளி)

(viii) கலையரசு சொர்ணலிங்கத்திற்குப் புகழீட்டிக் கொடுத்த பெண் பாத்திரங்களில் ஒன்றைப் பெயரிடுக. (01 புள்ளி)

(ix) நாடகப் பாத்திரம் ஒன்றின் பௌதிகப் பண்புகள் **இரண்டினைத்** தருக. (02 புள்ளிகள்)

(x) தொலைக்காட்சி நாடகத்தின் பிரதான இயல்புகள் **இரண்டு** தருக. (02 புள்ளிகள்)

**2.** (i) நாடகக் கலை வடிவத்தின் பிரதான பண்புகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) நாடக அளிக்கையானது,

(அ) ஓவியக் கலை
(ஆ) சிற்பக் கலை
(இ) கட்டடக் கலை
(ஈ) இலக்கியம்

ஆகியவற்றிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது என்பதனை தனித்தனியே சுருக்கமாக விளக்குக. (08 புள்ளிகள்)

**3.** (i) கூத்து ஒன்றின் ஆற்றுகைப் பண்புகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) 'ஆட்டக் கோலங்கள்', 'களரி ஏற்றம்' ஆகிய சொற்பதங்களை விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) நீர் அண்மையில் பார்த்த கூத்து பற்றிய உமது அனுபவங்களையும் அது பற்றிய உமது அபிப்பிராயங்களையும் குறிப்புகளாக எழுதிக்காட்டுக. (04 புள்ளிகள்)

**4.** நாடகமொன்றின் உருவாக்கத்தில் முக்கிய பங்குபெறும் பின்வருவோர் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) தயாரிப்பாளர் (04 புள்ளிகள்)

(ii) நெறியாளர் (04 புள்ளிகள்)

(iii) காட்சி விதானிப்புக் கலைஞர் (04 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க

**5.** நாடகமொன்றின் வெற்றிக்குத் துணைக் கலைகளின் பயன்பாடு பிரதானமாகின்றது.

(i) ஒளி விதானிப்பின் பிரதான பயன்பாடுகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் ஒளிக் கருவிகள் பற்றிக் குறிப்புகள் எழுதுக.

(அ) பொட்டொளி

(ஆ) பெருக்கொளி

(இ) வர்ணச் சக்கரம் (03 புள்ளிகள்)

(iii) நாடக எழுத்துருவில் குறிப்பிட்டுள்ளவாறு ஒரு பகுதிக்கு ஒளி நினைவுக் குறிப்பு (Lighting que) தயாரிக்கும்போது பயன்படும் பின்வரும் மூவகைக் குறிப்புகள் பற்றிச் சுருக்கமாக விவரிக்குக.

(அ) செயற்பாட்டுக் குறிப்பு

(ஆ) வரிக்குறிப்பு

(இ) நேரக்குறிப்பு (06 புள்ளிகள்)

**6.** (i) மகாகவி து. உருத்திரமூர்த்தியின் **புதியதொரு வீடு** நாடகத்தின் பிரதான கரு யாது ? (01 புள்ளி)

(ii) இக்கரு ஊடாகப் பேசப்படும் கதை யாது ? (03 புள்ளிகள்)

(iii) இந்நாடகத்தில் இடம்பெறும் பெண் பாத்திரங்கள் **இரண்டினைக்** குறிப்பிட்டு, அவற்றின் குணாதிசயங்கள் பற்றிச் சுருக்கமாக விவரிக்குக. (04 புள்ளிகள்)

(iv) இந்நாடகத்தில் உம்மைக் கவர்ந்த பாத்திரம் ஒன்றைக் குறிப்பிட்டு, அப்பாத்திரம் உம்மைக் கவர்ந்தமைக்கான காரணங்களை விளக்குக. (04 புள்ளிகள்)

**7.** (i) ‘தெருவெளி அரங்கு’ என்றால் என்ன ? (02 புள்ளிகள்)

(ii) தெருவெளி அரங்கின் பிரதான பண்புகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) ‘டெங்கு ஒழிப்பு’ அல்லது ‘போதைப்பொருள் ஒழிப்பு’ தொடர்பான தெருவெளி அரங்கொன்றிற்கான எழுத்துரு ஒன்றை ஆக்குக. (06 புள்ளிகள்)

* * *



Department of Examinations Sri Lanka